வெளியீடு எண் 16.

உ
குருபாதம்

# சிவபோக சாரமும் சொக்கநாத வெண்பாவும்

ஆசிரியர் :

தருமபுர ஆதீன ஸ்தாபகர்

**ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்.**

இவ்வாதீனம்

இருபத்தைந்தாவது மகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்கள்**

திருவுள்ளப்பாங்கின்படி வெளியிடப்பெற்றது.

**தருமபுர ஆதீனம்**

**1953.**



தருமபுர ஆதீன ஸ்தாபகர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

குருபாதம்

# முகவுரை

கவிதை, கனிந்த உள்ளத்தின் எழுச்சி. உள்ளக் கனிவு வாழ்க்கையின் பண்பாட்டால் உண்டாவது. வாழ்க்கையும் தெய்வவாழ்க்கையாயின் அதன் விளை வைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ! அனைவர்க்கும் வழிகாட்டுவதும், வாழ்விப்பதும், அனைவரையும் வசப் படுத்துவதும் அவ்வாழ்க்கையே.

இத்தகைய தெய்வவாழ்வில் ஈடுபட ஒருவரை உயர் தனிச் செம்பொருளே ஆட்கொள்ளுமாயின் அவர்தம் உள்ளத்தினின்றும் எழுந்த கவிதைகளே, உயிர்வாழ் விற்கு ஒளிதருவன. இக்கவிதைகள், மதிப்பிடுவார் மனப்பண்பாட்டிற்கேற்ப, உயர்வு விளக்கிநிற்கும் ஒளி வயிரங்கள்போல ஆன்மாக்களின் பக்குவநிலைக்கேற்ப அறிவொளியை – அக அமைதியை அள்ளிவழங்குவன.

இத்தகைய அருட்கவிதைகளைத் தந்த மெய்ஞ் ஞானிகள் கவிதைக்காகத் தோன்றியவர்களல்லர்; புகழ் தேடப் பொருள்தேடத் தோன்றியவர்கள் அல்லர்; ஆனால் அவர்கள் வாய்மொழிகள் யாவும் அறிவு வரம் பாக்கும் அருமறைக் கவிதைகளே. அவைகள் அவர் களைத் தேடியடைந்து அமரத்வம் அடைகின்றன,

கவிதையின் நிலைத்தவாழ்வு கல்விஞானியின் மனத்தில் விளைவன அல்ல. சிவஞானியின் சிந்தையிலேயே விளைவன.

அக்கவிதைகளே அறிவுத் தெய்வம் விளங்கும் பொழில்கள். பொருள்மணம் வீசும் பூக்கள். அநுபவத் தேன் சொரியும் அரவிந்தங்கள். அத்தேனை அருட்சிறை தாங்கும் ஆன்மாக்களாகிய வண்டுகளே உண்டு பயன் கொள்வன.

அநுபவஞானிகளிற் சிலர் தங்கருமஞ் செய்பவர்களாகத் திகழ்ந்தனர். சிலர் தாம்பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற கருணையுள்ளத்தோடு தாம்கண்ட பயிற்சியின் முதிர்ச்சியை எல்லாரும் எக்காலத்தும் அடைந்து ஈடேற அருளுள்ளங்கொண்டு அருணூல்களை ஆக்கித்தந்தனர்; அருட்சந்தானத்தையும் அவனியில் நிலைபெறுத்தினர். பொருள் அருள்வழியே சேர்ந்தது. அதனாற் பசுபுண்ணியமும் இடையீடின்றி நடைபெற்று வருகின்றன.

அத்தகைய இடையீடில்லாத எழிற்பரம்பரையில் நந்திபரம்பரையும் ஒன்று. அந்நந்திகள் நால்வரில் சனற்குமாரநந்தியின் வழிவரு ஸ்ரீ மெய்கண்டசந்தானத்தின் குருமூர்த்தியாக விளங்கியவர்கள் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக மூர்த்திகள்.

இவர்கள் திருத்தருமபுரமாகிய ஞானராஜதானியையும் நல்கிப் பண்டாரசாத்திரங்களாகிய வரம்பியல் நூல்

களையும் "குறிவழி அநுபவம் குருமொழி முதனூல்" துணைக்கொண்டு அருளிச்செய்தார்கள். அவற்றுள் இந்தச் **சிவபோக சாரமும், சொக்கநாத வெண்பா** வும் முதன்மையானவை.

இவை, அநுபவநிலை கண்டு உண்மையை உணர்த்துவன. வெண்பாயாப்பால் அமைந்தன. யாப்பியலுக்காகப் பொருள் நயத்தை இழக்காமல் பொருள்வழிச் செல்லும் சொற்பிணைப்புக்களை உடையன.

இத்தகைய சிறந்த இந்நூல்கள் இரண்டும் ஒருசேர 1932லும் 1936லும் ஆக இருமுறை வெளிவந்துள்ளன. சிவபோக சாரம், காஞ்சிபுரம் வித்துவான், திரு. அருணைவடிவேலு முதலியார் அவர்கள் விரிவுரையுடன் 1947ல் தனிநூலாக வெளிவந்துள்ளது. பண்டார சாத்திரம் என்ற பெயருடன் 1948ல் பதிப்பிக்கப்பெற்ற ஆதீன வெளியீட்டில் இவ்விரண்டும் இடம் பெற்றுள்ளன.

அவ்வவற்றிலும் சென்னை தமிழ்க்கலைக் களஞ்சியத் துணைப்பதிப்பாளர் வித்துவான், திரு. ப. மு. சோமசுந்தரம் பிள்ளை M. A., L. T., அவர்களின் ஆங்கில மொழிபெயர்ப்பும் தரப்பட்டுள்ளது.

இந்த ஆதீனத்தின் இருபத்தைந்தாவது மகாசந்நிதானமாக எழுந்தருளியிருந்து அருளாட்சி நடத்தும் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்கள், இத்தகைய அருள்நூல்களை ஆக்கிய

ஆதீன ஸ்தாபகரின் திருக்கோயிலைப் பெரும்பொருட் செலவில் கண்கவரும் அழகினதாக ஜீர்ணோத்தாரணத் திருப்பணி செய்வித்து, அத்திருக்கோயில் மகாகும்பாபிஷேகத்தன்று (21—8—1950) மூன்றும் பதிப்பாக இவ்வெளியீட்டை அச்சிட்டு வழங்கினார்கள்.

"தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்" என்பது திருமூலர் உபதேசமாதலின் அன்பர்கள் விருப்பத்திற்கு இணங்க, ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் திருவுள்ளப்பாங்கின்வண்ணம் மறுமுறையும் நான்காம் பதிப்பாக இப்பொழுது இவ்வெளியீடு வருகிறது.

அன்பர்கள் பெற்றுப் பயன்பெறுவார்களாக.

தருமபுரம், 19—10—53.

ச. தண்டபாணி தேசிகர்,
ஆதீனப் பல்கலைக் கல்லூரித் துணைத்தலைவர்.

# NOTES ON "SAIVA SIDDHANTA"

The Saiva Siddhanta school traces its origin from the very Vedas and Agamas, the two oldest sacred books of the Hindus. They are considered to be the revelations of God and are most authoritative. The greatest and the most ancient commentator of the Brahma Sutra, Nilakanta Sivacharyar, says that he sees no difference between the Vedas and Agamas and quotes profusely in his Bhashya Vedic texts to substantiate his interpretation in the light of Saiva Siddhanta philosophy. Again, Appayya Dikshita, Haradatta Sivacharya and Sivajnanamunivar, all belonging to the Siddhanta school of thought, have written elaborate treatises and one and all of them find mutual concordance and harmony between the Vedas and Agamas. The latter, the real source of Siddhanta philosophy, are considered to be the commentaries on the Vedas. They are also held as special revelations of the Saiva religion. They are divided into Karma and Jnana Kanda, of which the latter deals most elaborately and exhaustively with the details of the Saiva Siddhanta philosophy. Besides, glimpses of this philosophy can be found even in Puranas and Itihasas told in the form of stories and anecdotes easily understood by all.

These scriptures are all in Sanskrit and an equally good stock of sacred writings, commanding greater importance and sanctity, abound in Tamil as well. Tevarams, the inspired hymns of the three great Saints Appar, Sambandhar and Sundarar and the Tiru-vachakam of Manikkavachakar are reckoned to be the Tamil Vedas, while the fourteen Siddhanta works are classed as Agamas. Just as Vedas serve to educate the generality of mankind with regard to the main doctrines of religion, so do the sacred hymns of the canonized saints. Agamas, on the other hand, are exclusively philosophic in their teaching and expound the ultimate truths which are intended for the advanced section of those engaged in religious culture. Similar to this is the function of the fourteen Siddhanta works in Tamil.

## SAIVA SIDDHANTA

This Saiva Siddhanta school, has like all other schools of thought, a cosmic evolution. If the Siddhanta lineage is understood properly, it will be found that this philosophy is as old as any other, if not older. It is said that at the very beginning after the grand dissolution *viz.*, Mahasamhara—the Vedas and Agamas come out from Pranava, first in the form of Nada, then in that of Bindu, and then in that of Akshara. Words and phrases formed out of Aksharas that issued forth from the four side-faces of Siva, came to be called the, four Vedas and those that issued from the Urdhva-mukha—the upward face, are known as the Agamas

Vedas were revealed to Brahma through Ananta Deva and the Agamas to the ten Maheswaras and eighteen Rudras. Thus there came into existence twenty-eight Agamas. These were taught to Ananta Deva who handed them down to Sri Kantha and who in his turn revealed them to Nandi Deva. When Nandi Deva had his doubts in understanding the Agamas, he requested Sri Kantha to clear them Sri Kantha taught Nandi 'Sivajnanabodha', which is a section of the Raurava Agama. This Sivagnanabodha was taught by Nandi Deva to his disciple Sanatkumara, who to Satyajnana Darsani, who to Paranjyothi Muni and this Paronjyothi taught it to Meykanda.

Meykanda, translating Sivajnanabodha into twelve Tamil Sutras taught it to his first disciple, Arulnandhi. This has been handed from Arulnandhi to Maraijnana-sambandha and from him to Umapatisivacharya. These teachers, from Meykanda Deva to Umapatisivacharya, are styled the "Santana Kuravars".

## SALIENT FEATURES

Saiva Siddhanta postulates the existence of three ultimate entities or realities. These are Pati or God; Pasu or Soul, Pasam or the bondage of souls. These three are eternal and have neither beginning nor end. Pati or God is in its nature spiritual in form and is Almighty, All-merciful, Omnipresent, just and perfect

and all love and ever blissful. He is beyond the approach of Pasam and He is the fountainhead of eternal happiness whence there is no return, when once reached.

Souls are infinite in number. They are of crystal-like nature ready to reflect the object before which they are placed. They are also spiritual in form and are capable of enjoying the eternal happiness as recipients of the grace of God. But, they are enveloped in Pasam and hence subjected to pain and sorrow.

Pasam or the bondage of souls is divided into three kinds Anavam, Mayai and Kanmam, which are known also as the three malas. Anavam makes the sou ignorant and arrogant and it is egoism. Mayai is the source of material universe and capable of lifting man from his dormant and inert nature with the help of Pati, Kanmam is the accumulation of good and bad actions of souls and the cause of births and deaths of mankind. The bondage of souls by Pasam is an eternal condition but this bondage varies according to the different grades of souls. Thus, souls with one mala are called Vijnanakalars, souls with two malas are known as Pralayakalars, and those with all the three Sakalars. Pasu and Pasam are so closely intimate that we cannot see the one separately from the other. Yet, their union is not indissoluble. Pasu or soul will be released from the bondage of Pasam by the grace of God and when the powers of Pasam are exhausted, the Pasu or soul can clearly see God and be one with Him

to enjoy the heavenly beatitude. Just as the soul had an inseparable union with Pasam in its original (Kevala) state, so also it will have the same inseparable state with God, after it is fully released from the bondage of Pasam. This relation is called 'Adwaitam' *viz.*, unity in duality.

## TATTVAS

Students aspiring to drink deep in the fountain of Saiva Siddhanta Philosophy must have a through knowledge of the tattvas. These are elaborately described and defined in Kattalais, small tracts, written in Tamil.

Most of the Indian schools of philosophy speak of the twenty-four atma tattvas, namely--the five elements, earth, water, fire, air and akasa; five jnanendriyas: ear, skin, eye, tongue and nose; five tanmatras; hearing (sound), touch, seeing (sight), taste and smell; five karmendriyas; vak, pada, pani, payu and upastham; the four Antahkaranas; manas, buddhi, chittam and ahankara; or twenty-five with Mulaprakriti, one of the Vidyatattvas. But the Saiva Siddhanta school postulates eleven more tattvas over and above these twenty-five Purushatattvas and they are, the other six Vidyatattvas. Ragam, Kalam, Niyati, Kalai, Vidya, Asuddamayai; and five Sivatattvas; Suddhavidya, Iswaram, Sadakkyam, Bindu (Shakti) and Nada (Sivam). From Suddhavidya to Nada are known as "Suddha Maya" From which have sprung up the four vacs - Sukshama, Paisanti,

Madhyama and Vaikarai. Thus, these 36 Tattvas beginning from Prithvi (Earth) to Nada are called Tattvadhva. Besides this, there are five more, namely, Bhuvanadhva embracing the vast region of Kalagnibhuvanam to Anasritabhuvanam, Varnadhva comprising of 51 Aksharas beginning from the letter अ. Padadhva treating about 81 Padas commencing from Vyomamvyapi, Mantradhva, speaking of the eleven Mantras and Kaladhva describing Panchakalas beginning from Nivirtti. These and other intricate features of abiding interest to seekers after truth are well portrayed in Sivajnaswamigal's "Siddhanta Prakasikai" and Kasivasi Senthinatha Aiyar's "Saiva Siddhanta Sattva Catechism."

Some of the main features of the Saiva Siddhanta, a knowledge of which may help in the clear understanding of Sivabhogasaram, are the following: Siddhanta means the true end of sthe Vedas and Agamas. The essence of the Vedagamas is the nature of the Pati, Pasu and Pasam; five malas: Anava, Tirothana, Maya, Suddhamaya, and Asuddhamaya; the development of the Suddhamaya, Asuddhamaya and Prakritimaya; Karma and its sub-divisions: sanchita, prarabdha, agamya; the functions of the ninety-six tattvas; the six adhvas; five kalas; six adharas; three mandalas; three main avastas and their filteed sub-divisions; four margas namely, dasamarga, putramarga, sahamarga and sanmarga; the four steps of charya, kriya, yoga and jnana; the secret of the five letters; the five-fold suddhi: the four parts of Saktinipata; different classes of diksha and

the dasa-karyam, the most important of which is Sivabhoga. The Sivabhoga is the subject matter of this book.

Judged in the light of the above observations, a work on the most sacred and vital theme, such as 'Sivabhogasaram' is undoubtedly a distinct welcome to the world of Saiva Siddhanta Mysticism. The talented author has unlocked the vast treasures of eternal happiness in the realisation of the Supreme and has placed his readers under a deep debt of gratitude to him for having served as a beacon light to the sweet realms of Siva Siddhanta Philosophy. In these days when vernacular literature is much neglected, a genuine attempt at rendering such an important work as this in English is not out of place. It is earnestly hoped that the learned public would dive deep into the fountain of Saiva Siddhanta Philosophy with the happy translation of Sivabogasaram herein, by M. R. Ry. P. M. Somasundaram Pillai, Avl., M. A., L. T., and enjoy communion with the Supreme in a boundless measure. If ventures of this kind are encouraged in that spirit, the learned translator will not have laboured in vain.

SHIYALI,
23—4—1931.

S. SADASIVA MUDALIAR.

நூலாசிரியர்.

# குருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறு

செந்தமிழ் வளமும் தென்றலின்பமும் முந்துற நுகர, முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானால் மன்னர் மன்னனாக மணிமுடி தாங்கிச் சவுந்தர பாண்டியன் எனும்பேர் சார்ந்து ஆளப்பெற்றதும், தமிழ்நயம்தெரிந்து சைவம் காத்த பெரும்புனல் வையைத் திருவளம் பெருக்கும் சிறப்புடையதும் ஆகிய பாண்டிய நாட்டிலே "மின்னார் தடமதில்சூழ் வில்லிபுத்தூர் என்றொருகால் சொன்னார் கழற் கமலம் சூடினோம்" என்று தன் பெயர் கூறவே பேரின்பமும், பெறுபயனும், தெய்வத் தன்மையும் ஒருங்கு அளிப்பதாகிய ஸ்ரீவில்லிபுத்தூரிலே, தாளாற்றித்தந்த பொருளெல்லாவற்றினையும் தக்கார்க்கு வேளாண்மை செய்யும் சிறப்பு வாய்ந்ததும், மன்னன் செங்கோலையும், தன் ஏர்க்கோல்வழி நடாத்தும் மாண்பு வாய்ந்ததும், வானம் தந்த மழைப்பயன் கொண்டு வாரிபெருக்கி வளம்பல செய்து தானமும் தவமும் தடையின்றி நடக்கச்செய்யும் பெருமை சேர்ந்ததுமாகிய கார்காத்த வேளாளர் குடியிலே, "கற்றல் கேட்டலுடையார் பெரியார்" என்னும் ஞானநூற் சொற்றொடரைப் பெருவரம்பாகக் கொண்டு, சமயசாத்திர நுணுக்கங்களை நன்கு கற்றுக் கேட்டுத் தெளிந்து நற்றவச்

செல்வராய், சிவபூஜை தியானம் சிவாலய வழிபாடு முதலியவைகளைச் செவ்வனே செய்து வருகின்ற **சுப்பிரமணியப்பிள்ளை** என்கிற ஞானச்செல்வர் ஒருவர் இருந்தார். அவருக்குப் பண்டை நற்றவத்தால் இல்லறப் பண்பு எல்லாம் ஒருங்குவாய்ந்த நற்குடிப் பிறந்த **மீனாட்சியம்மை** என்னும் கற்பிற் சிறந்த பொற்புடை நங்கை நல்லூழ்கூட்ட இல்லறத் துணைவியாயினர்.

இவர்கள் இருவரும் இல்லறத்தையே இம்மை மறுமை இரண்டும் தரும் நல்லறமாக நடத்திவந்தனர். இவர்கள் சிந்தை எப்பொழுதும் சிவத்தினிடமே சேர்ந்திருந்தமையால் இவர்கள் செய்யும் புண்ணியங்கள் யாவுமே சிவபுண்ணியங்களாயின. அத்தவத்தின் மிகுதியால் சிவ ஒளி திகழும் தவநிறை குமரர் அவதரித்தார். பிறந்தநாளோ இறைவனுக்கு உகந்த திருநாளாகிய சோமவாரம். செல்வச் சிறுவரின் முகவொளி பெற்றோர் மனதைக் கவர்ந்ததென்பது ஒரு வியப்பன்று. குழவியைக்காண வந்தவர்களுள் தெய்வவொளிதிகழும் சிறுவரென்பார் சிலர். உலகம் உய்யப் பல கலை நிறைந்த பாலரென்பார் சிலர். இங்ஙனம் வருங்கால நிகழ்ச்சியைக் குறிப்பாலுணர்த்தும் திருமேனியைக் கண்டு பலரும் வியந்து பாராட்டுவாராயினர். கண்டவர் மனதை வசீகரிக்கும் கருணைக் குழந்தையின் பெற்றோர் மனம் பேரின்ப வெள்ளத்து ஆழ்ந்தமையைப்பற்றி அறிவிக்க முடியுமோ? வளர்ச்சிக் காலத்துத் தளர்நடை நடத்தல் சிறுதேருருட்டல் சிறுபறை கொட்டல் முதலிய பிள்ளைப் பருவ விளையாட்டுக்கள் யாவும் உரியகாலத்தே நிகழ

இளமைப் பருவத்தின் ஐந்தாம் பருவத்தை அடைந்தார். பக்குவமறிந்து மார்ச்சார நியாயத்தால் வலியவந்து ஆட்கொள்ளும் பரமாசாரியனைப் போலக் கல்வி ஞானமும் இவரை வந்து ஈண்டின. இருமொழிப் புலமையும் ஒருசேர எய்தின, உலகத்து வினைவயத்தானெழுந்த பிறப்பொன்று; பண்டை நற்றவத்தால் உலகிற்கு நல்வழி காட்டவந்த பிறப்பு மற்றொன்று. வினைப்பிறப்பு கல்வி ஞானத்தையும்கூட மிகுந்த உழைப்பாலுறும்; உற்றதையும்மறக்கும். அருட்பிறப்பைக் கல்வியும் ஞான மும் தாமே வந்தடைந்து பெருமை எய்தும், இவர்கள் பிறப்போ உய்விக்கவந்த பிறப்பு. ஆதலால் கல்வியிற் சிறந்தோர்களென்பதில் வியப்பொன்றுமில்லை. இவ்வாறாக சிவஞானச்செல்வர் பதினாறும் ஆண்டினை அடைந்தார். தாய் தந்தையர்களும் கல்வி கேள்விகளிற் சிறந்த மகனைத் தம்மிற்றம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து மன்னுயிர்க்கெல்லாம் இனிதாம் என்று எண்ணி எண்ணி மகிழ்ந்திருந்தனர்.

அப்பொழுது தமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானைவழிபடவேண்டும் என்ற பெருவிருப்பம் தாய் தந்தையர்கட்கு உண்டாயது. தமது அரும்பெறற் செல்வரையும் அழைத்துக் கொண்டு மதுரையம்பதியை அடைந்தனர். புலவர் தலைவராயிருந்து புலவரைப் போற்றிய பெருமானாய் — வாதவூரடிகளை வழியடிமைகொண்ட வள்ளலாய் — வேதத்திற்குப் பொருளருளிய விழுமிய தலைவனாய் — முப்பொருளுண்மைகளையும் முத்தி நிலையையும் உணர்த்திய

முதல்வனுயுள்ள சோமசுந்தரக் கடவுளையும், தமிழ் நாட்டுத் தனியரசியாய்—கடைக்கண் கொழித்த கருணைப் பெருவெள்ளத்து மூழ்கும் அடியார் பிறவிப்பிணிக்கு மருந்தாய் - மலையத்துவசன் பெற்ற பெருவாழ்வாயுள்ள மீனுட்சி யம்மையாரையும் வணங்கிக்கொண்டு சிலநாள் அங்கு வதிந்தனர். காலந்தவருது வழிபாடு செய்து வந்தனர். அப்போது கண்ணுதற்பெருமான் கடைக்கண் பெருவெள்ளம் ஞானசம்பந்தர்மீது பாயத் தொடங் கிற்று ; சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது. தெய்வக் கலை மேன்மேலும் விளங்கத் தொடங்கிற்று. அதனுல் இல்லத் தொடர்பு மெல்ல நழுவிவந்தது.

தாய்தந்தையர்களோ இல்லறப்பற்று இழுக்க வில்லி புத்தூர் செல்ல விரைந்தனர். சமயமுறைப்படி கோயி லுக்குச்சென்று பொற்றுமரையில் நீராடி விடையேறும் பெருமானிடம் விடைகொண்டனர். வீடு திரும்புகிற வர்கள் செல்வக்குமாரரை — ஞானசம்பந்தரை வீட்டுக் கழைத்தனர். குமாரர் மனமோ நிலைத்த குறிக்கோளில் நிலைத்திருந்தது. தந்தையார் அழைப்பு செவி புகவில்லை. மீட்டும் மீட்டும் வற்புறுத்தி அழைத்தனர். சிவஞானத் தேனரும்பு சிந்தையாராகிய ஞானசம்பந்தர் "என்னு யிர்த் தந்தையும் தாயும் இவ்வாலயத்தில் இருக்கிறுர் களே; இவர்களைவிட்டு எங்ஙனம் நீங்குவேன்; எப்படி வருவேன்; உடற்றந்தையாகிய உங்களோடு எனக்கு உறவில்லை" என்றுரைத்தனர். இதைக்கேட்ட தாய் தந்தையர்கள் மனங்கலங்கினர். ஞானசம்பந்தர் சாத்திர தோத்திரவாயிலாகப் பலபல சமாதானங்கள் சொல்லித்

தேற்ற, ஒருவாறு தேறிச்செல்கிறவர்கள் தமது செல்வர் சிவஞானப்பெரியாராக — சமயம்வளர்க்குந் தலைவராக ஆக்கக்கூடுமென்ற எண்ணமானது அவருடைய நிகழ்சியாலும் திருவருளாலும் மனத்துள்தோன்ற மட்டற்ற மகிழ்ச்சியோடு இல்லம் அடைந்தனர்.

பின்பு ஞானசம்பந்தர் விதிமுறை வழிபாடாற்றிப் பல நாள் மதுரையில் வசித்துவந்தனர். ஒரு நாள் விடியற்காலையில் பொற்றாமரைத்தடத்து நீராடச் சென்றனர். அங்கு திருநீறும் கண்டிகையும் திகழ்தருமேனியோடு வடக்குநோக்கியிருந்து சிவலிங்கத் திருமேனியைத் தம்முன் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு பல அடியார்கள் தன்வசமற்று நாக்குழற, உரை தடுமாற, கண்ணீர் வாரச் சிவபூஜை செய்துகொண்டிருத்தலைக் கண்ணுற்றார். தாமும் அவ்வாறு சிவபூஜை செய்து சிவானந்தத்துள் திளைத்திருப்பது எந்நாட்கூடுமோ என்று எண்ணிக் கொண்டே ஒரு விருப்புமின்றி வழிபாடு செய்துவரும் அவர் அன்று சொக்கேசர் திருமுன்பு 'தேவரீருடைய அருட்டிருமேனியை வைத்து அருச்சிக்கும் பேறு எனக்கும் இப்பிறவியில் கிட்டுமோ?'' என்று வேண்டிநின்றனர். நெடுநேரஞ் சென்றபிறகு அந்தக் குறைமனத்தோடு வீடுசென்று அன்றிரவு துயில் கொண்டனர். குறைமுடித்தருளும் பெருமானாகிய நிறைசெல்வச் சொக்கர் அவர் கனவில் எழுந்தருளி ''ஞானசம்பந்த! நீ விரும்பிய வண்ணம் நாம் சிவலிங்கத் திருமேனிகொண்டு பொற்றாமரைத் தடாகத்தின் ஈசான மூலையிலே கங்கைக்குளிருக்கிறோம்; காலையில் அங்குச்

சென்று மூழ்கி எம்மைப் பூசிப்பாயாக" என்று திரு வாய்மலர்ந்தருளினுர். ஞானசம்பந்தர் இறைவன் அருட் செயலிருந்தபடி என்னே! எளிவந்த கருணையால் அடியேனையும் ஆட்கொண்டனரே; இதனைக்காட்டிலும் இப்பிறப்பில் எளியேனெய்தும் பேறு வேறுண்டோ என்று எண்ணி எழுந்து ஆனந்தக்கூத்தாடித் தோத்திரித்த வண்ணமே விடியுமளவை எதிர்நோக்கினர். அவர்கள் உள்ளத்தின் விரைவு விடியலை நெடிதாக்கி விட்டதாகத் தோன்றிற்று. விடியல் நீள, விழைவு பெருகுகின்றது. விடிந்ததும் நாட்கடன் முடித்து நீராடப் பொற்றாமரைக்குச் சென்று நீராடி இறைவனுணர்த்திய இடத்தில் இறங்கி மூழ்கித் தேடினர். அப்போது இறைவன் சிவலிங்கத் திருமேனிகொண்டு பெட்டகக் கோயிலோடும் இவர் கரத்திலெழுந்தருளினுர். உடனே ஞானசம்பந்தர் கரையேறிப் பெட்டகத்தைத் திறந்து சிவலிங்கத் திருமேனியைக்கண்டு சிந்தைநிறைந்த மகிழ்ச்சிக் கடலிற்றிளைத்து. ஆனந்தக்கூத்தாடி, சந்நிதியை அடைந்து, சொக்கநாதப்பெருமானை வணங்கிக் "**கண்ணுக்கினிய**" என்னும் பாடலை முதன்மையாகக் கொண்டு பதினெரு பாடல்களைக் கொண்ட கலித்துறையை ஆக்கி அருளினுர்கள். அதில் ஆன்ம வியல்பை எடுத்துக்கூறிச் சொக்கநாதப் பெருமானை நோக்கி "நீ பூரணவாரியுள்ளே நண்ணும்படிச்செய்; நின்னைப் பாடும்படிச் செய்; நினைந்தேத்திப் பணிந்தெழுந்தே ஆடும்படிச்செய்; மலமைந்தும் வீடும்படிச்செய்; என வேண்டுகிருர், மற்றும் "ஏருத விண்ணப்பம் கூறுகின்றேன், அஃதேதெனில்" எனத்தொடங்கிச் சொக்கநாதர்

திருச்செவியில் ஏற்றிய வரந்தான் இன்றைக்கும் என்றைக்கும் சொக்கலிங்கத் திருவுருவிடை இறைவன் இருந்து அருள் வழங்கி நிற்கும் அருளாற்றலாகும்.

இவ்வண்ணம் சொக்கநாதப் பெருமானை வழிபட்டு எழுந்தருளியிருக்கின்ற வேளையிலே சிவலிங்கப் பெருமானைப் பூசித்தற்குரிய விதிமுறைகளையும் சிவ ஞானோபதேசத்தையும் ஒரு ஆசாரியன் வாயிலாகவே அடைய வேண்டுமென்று சொக்கநாதர் திருமுன்பு சென்று வேண்டினர். கருத்தறிந்து முடிக்கும் கண்ணுதற் பெருமான் அன்றிரவு வழக்கம்போலக் கனவிற்றோன்றி 'ஞானசம்பந்த! நமது உபதேச பரம்பரையில் வந்த கமலை ஞானப்பிரகாசரிடம் நீ விரும்பியவற்றைப் பெற்று பூசித்துவருக'' என ஆணை தந்தனர். அவ்வாறே திருவாரூர் ஞானப்பிரகாசர் கனவிலும் தோன்றி ''வருகிற சோமவாரத்தன்று உன்னிடம் வருகிற நமது ஞானசம்பந்தனுக்கு விதிப்படி ஞானோபதேசம்செய்து சிவலிங்க பூசையும் எழுந்தருளப்பண்ணிக் கொடுக்க'' என்று கட்டளையிட்டனர்.

ஞானசம்பந்தர் விடியலெழுந்து சொக்கலிங்கத் திருவருள் இருந்தபடியே திருவாரூர் செல்லத்தொடங்கி, திங்கட்கிழமை காலை திருவாரூரை யடைந்தனர். கமலாலயம் என இப்போது வழங்கும் தேவதீர்த்தத்தில் நீராடி " இன்றுதானே பெருமான் அருளிய இனிய நாள்; குருநாதன் தரிசனம் கிடைக்கும் பெருநாள்'' என்று எண்ணிக்கொண்டே திருக்கோயிலை வலம்வந்தனர், இவ்வாறே சொக்கலிங்கப் பெருமான் ஆணை தாங்கி வரும்

அருந்தவச் சீடர் கிடைக்கும்நாள் இதுவே என்று திரு வாரூர்ச் சித்தீச்சரம் தக்ஷிணாமூர்த்தித் திருமுன் கமலை ஞானப்பிரகாசர் சிவயோகத்தினிதமர்ந்திருந்தனர். அப் போது வலம்வருகின்ற ஞானசம்பந்தர் **ஈனமல இருள் நீக்கும் ஞானபாநு** இவர்தாம் என்பதை அறிந்து காந்தங்கண்ட இரும்புபோல் விரைந்து சென்று திருவடி களில் விழுந்து வணங்கி ஒருபக்கத்தொதுங்கி நின்றார். அப்போது ஞானப்பிரகாச தேசிகர் அபய அத்தங் கொடுத்து தக்ஷிணாமூர்த்தி சந்நிதியிலேயிருக்கப்பணித்து, திருவருள் நோக்கஞ்செய்து, ஞானதீக்கை புரிந்து பூசையை எழுந்தருளப்பண்ணிக் கொடுத்தனர். ஞான சம்பந்தர் தமது குருநாதர்மேல் **பண்டாரக்கலித்துறை** என்னும் ஒரு நூலையியற்றித் தோத்திரித்தனர். பின் தமது ஆன்மார்த்த மூர்த்தியின்மேல் **சொக்கநாத வெண்பாச்** சொல்லித் தோத்திரித்தனர்.

இவ்வாறு குரு வழிபாடும் இறை வழிபாடும் இயற்றிக்கொண்டு திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் போது ஒருநாள் மாலைக்காலத்து, கமலை ஞானப்பிரகாசர் திருக்கோயில் வழிபாட்டிற்காகச் சென்றவர்கள் அர்த்த யாமம் ஆகும்வரையில் சித்தீச்சரம் தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் சிவயோகத் தமர்ந்திருந்தனர். அர்த்தயாமம் ஆனதும் வீட்டுக்குத் திரும்புகையில் கைவிளக்குக்காரன் தூங்கி விட்டமையால் ஞானசம்பந்தர் தாமேசென்று கைவிளக்கை எடுத்துக்கொண்டு உடன்வர, குமரகோயில் பின்தெருவிலுள்ள தமது இல்லத்திற்கு எழுந்தருளினர். வீட்டுக்குச் செல்லுகின்ற ஞானப்பிரகாசர் தமது

சீடரைநோக்கி "நிற்க" எனப் பணித்துச் சென்றார்கள். 'குருவாணை நிற்க என்றுதானே' என்று எண்ணிய அவர்கள் நின்ற இடத்திலேயே சிவயோகத்தமர்ந்து சிவானந்த இன்ப நிலையில் மூழ்கியிருந்தனர். அன்றிரவு பெருமழை பெய்தது. பெய்தும் திருமேனியில் ஒரு துளிகூட விழவில்லை. ஒருகோல் சதுரத்தில் சுற்றிப்பெய் திருந்தது. விடியலில் விழித்து இல்லம் விளக்க வந்த ஞானப்பிரகாசருடைய மனைவியார் கைவிளக்கேந்தி ஞானசம்பந்தர் நிற்பதையும், மழையின் நிலையையும் அறிந்து வியந்து உள்ளே சென்று தம் கணவருக்கு உணர்த்தினார்கள். வெளிப்போந்த ஞானப்பிரகாசர் இவர்களது அதிதீவிர பக்குவ நிலையை அறிந்து "அப்பனே! உன்னால் பல ஆன்மாக்கள் பல்லூழிகாலம் வரை ஈடேறத் திருவருள் துணைநிற்கின்றது. ஆதலால் வடக்கே சென்று உபதேசவாயிலாக உண்மையைப் பரப்புக; சித்தாந்தசைவச் செந்நெறியை நிலைநிறுத்துக" என்று ஆணை தந்தனர். அதனைகேட்ட இவர்கள் மனம் பதைத்துத் "தேவரீரைவிட்டு எவ்வாறு பிரிந்திருப்பேன் எருதுக்கும் பொதிக்கும் இச்சை உண்டோ; எனக்கும் உடற்கும் அப்படியே; ஆதலால் பரமாசாரியர் பணித்த படியே நடக்கக் கடமைப்பட்டவன்" என்று வருந்தி நிற்கின்றபோது, "நமக்கு மிக அணிமையிலுள்ள சித்தி க்ஷேத்திரமாகிய தருமபுரத்தையடைந்து ஆண்டுத்தங்கி அருள் வழங்குக" என்று ஆணைதந்து அனுப்பினர். தெளிவு குருவின் திருவார்த்தையைக் கேட்டலாதலின் ஆசிரியர் ஆணைப்படி தருமபுரம் வந்து அருள் வழங்கி அமர்ந்திருந்தனர். தமது சிவாநுபவங்களை எல்லாம்

செறித்துப் பெரும் பொருளடங்கிய சிறு நூலாக— சிந்தை தெளிவிக்கும் தெளிதேனுக உள்ள **சிவபோக சாரத்தையும், திரிபதார்த்த ரூபாதி தசகாரிய அக வலேயும்** அருளிச்செய்தனர்.

இவர்கள் இவ்வாறு ஞானபாநுவாய் எழுந்தருளி இருக்குங் காலேயில் சிதம்பரத்திலுள்ள கண்கட்டி மறைஞானபண்டாரம் என்பவர் ஒரு கல்விமானுக விளங்கிவந்தார். அவர் ஆகமசாத்திரங்களிலும் சைவப் பெருநூல்களிலும் தக்க பயிற்சியும் அநுபவமும் உடையவராயிருந்தனர். ஆனுல் அவருக்குத் திருவருள் விலாசம் பதியவேண்டியநிலேயில் இருந்தது. அதனுல் அவருடைய அநுபவமானது ஆன்மாவிற்கே இயற்கை யாக ஆனந்தம் உண்டென்றும், அது மலத்தால் தடைப் பட்டிருக்கிறதென்றும், தடைநீங்க வெளிப்படும் ஆநந் தத்தை ஆன்மா நுகருகிறதென்றும், சிவனே ஒப்ப ஆன்மாவுஞ் சச்சிதானந்தரூபி என்றும், அதுவே முத்தி நிலேயென்றும் உணர்ந்து **முத்தி நிலே** என்றதொரு நூலேயும் அருளச்செய்தது. மக்கள் பலரும் இக்கொள் கையை இவருடைய கல்வி வல்லமையாலும் சொல்லுந் திறத்தாலும் பசிநீங்கக் காணும் இன்பம் போல மலம் நீங்கக்காணும் மகிழ்ச்சியென்ற முறைமையின் எளிமை யினுலும் கடைப்பிடித்தனர். இதனேத் திருவுளம்பற்றிய இக்குருமூர்த்திகள் மக்கள்மேல்வைத்த பெருங்கருணே யினுல் ஆன்மாவுக்கு ஆனந்தம் இயற்கையல்லவென்றும், திருவருட் பதிவால் மலம் நீங்கச் சிவாநந்தத்துத் திளேக்கும் பேறே முத்தி என்றும், ஆன்மாவிற்கு

உளதாகும் ஆனந்தம் இறைவனிடத்திலிருந்து பெற்ற பேறே என்றும் முடிந்த முடியாக இருபத்திரண்டு வெண்பாக்களாலாகிய **முத்தி நிச்சயம்** என்னும் அநுபவ ஞானநூலை ஆக்கியருளினார்கள்.

இவ்வாறு பலநாள் அரன்பணி அறப்பணி ஆற்றி ஆனந்த பரவசர், சச்சிதானந்தர், மருதூர் ஆபத்துத்தாரணர் முதலான சீடர்களுக்குச் சிவஞானோபதேசம் செய்து எழுந்தருளியிருக்குங்காலத்து, சிவயோகசமாதியில் எழுந்தருளத் திருவுளங்கொண்டு தீவிரதரபரிபக்குவராகிய ஆனந்த பரவசரை ஞானபீடத்தில் எழுந்தருளுவித்துத் தாம் விரும்பியவண்ணம் சிவலிங்கத்தினடியில் அமர்ந்தார்கள்.

ஆனந்தபரவசர் கனிந்த கனியாயிருந்ததால் அவர்களும் தமது ஞானமூர்த்தியின் திருக்கோயில் மேல்பால் சிவயோகத்திலமர்ந்தனர். இதனை அடியார்கள் விருப்பப்படித் திருவுளத்தடைத்த குருமூர்த்திகள் அவிச்சின்ன சத்சம்பிரதாயம் உலகில் நீடுவாழ எண்ணி, சிவயோகத்தினின்றும் வெளிப்போந்து சச்சிதானந்தருக்குச் சிவஞானங் கைவரப்பண்ணி வைகாசிமீ அபரபக்க சப்தமி தினத்திலே சிவசமாதி கூடினார்கள்.

இவர்கள் குருவாகிய கமலை ஞானப்பிரகாசரைப் பற்றிய, சதாசிவதேவ மகாராயர் காலத்தில் அவர் பிரதிநிதியாகத் தஞ்சையையாண்ட கிருஷ்ணதேவராயர் பெண்வயிற்றுப் பேரனான கிருஷ்ணமகாராசையன் ஆணைப்படி வெட்டுவித்த கல்வெட்டொன்றில் "சிக்கல் வடகுடி

ஓடாச்சேரி முதலிய தேவதானங்களுக்குத் திருவாரூர் ஞானப்பிரகாச பண்டாரத்தை, கணக்கு எழுத்தும் **பரதேசி முத்திரையும்** அடைத்துக் கொள்ளும்படிக்கு உத்தரமளிக்கிறது" எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது. இச்சாசன காலம் கி. பி. 1561, அன்றியும் கமலை ஞானப் பிரகாசரியற்றிய திருமழுவாடிப் புராணத்துச் செய்யு ளாகிய இது,

**தழுவிய கலியு கஞ்சேர் சகாத்தமா யிரத்து நானூற்**
**றமிதரு மெண்பத் தேழாண் டொழிந்தபின் குரோத னாண்டின்**
**மொழிதரு மாசித் திங்கண் முற்பக்க முதனாள் தன்னின்**
**மழுவையம் புராணந் தன்னை வகுத்தனன் தமிழி னாலே.**

சாலிவாகன சகாப்தம் 1488 என்று தெரிவிக்கிறது. இவ் விரு ஆதாரங்களும் ஞானசம்பந்தர் காலம் சுமார் 390 ஆண்டுகட்கு முன்னர் என்று துணிய இடந்தருகின்றன.

இங்ஙனம் திருக்கயிலாய பரம்பரையில் அவிச்சின்ன சத்சம்பிரதாயியாகிய இந்தக் குருமூர்த்திகள் தன்னடைந் தார்க்கு ஊனுடைய பிறவிக்கானத்து உழலாது முத்தி நாடெய்த ஓர் ஞானவாரணம் நல்கும் பெருமானாகி — ஞானவாரமுத பானமதருந்திக் கருவிகள் கழன்று பரவச மாகிப் பரமானந்தப் பரவையுட் படிந்து பேராவியற்கை பெற்றினிதிருப்ப ஆரா இன்பம் அளித்தருள் அண்ண லாகத் திருக்கோயில் கொண்டெழுந்தருளி இருக்கின் றார்கள் என்பது ஏனைய குருமூர்த்திகளது சமாதித் தானங்கள் போலாது இவர்களுடைய கோயில் **ஸ்ரீ ஞான புரீசுவரர் ஆலயம்** என்ற திருநாமத்தோடு சகல

ஆவரணபரிவாரங்கள்சூழ விளங்கிவருவதாலும், நித்திய பூஜையோடு பிரமோற்சவ பக்ஷோற்சவங்கள் இடையறாது நடைபெற்று வருவதாலும் அறியக்கிடக்கின்றது. இது கண்கண்ட தெய்வமாக விளங்குகின்ற ஸ்ரீ குருஞானசம்பந்தருடைய திருக்கோயிற்குள்ள தனி மாண்பாகும்.



# GURUGNANASAMBANDHA

## the founder of the Dharmapuram Adhinam Mutt

There lived long ago at Villiputtur in the Pandya Kingdom a devout couple, Subramania Pillai and Minakshi Ammal, belonging to the agriculturist class. (Karkatta Saiva Vellala Caste) A son was born to them who shone with divine splendour. From the age of five learning and wisdom seemed to woo him of their own accord and by his sixteenth year he was a full - fledged scholar.

The parents of the boy once took him to Madura for offering worship at the shrine of Chokkalinga and prolonged their stay there for sometime discharging devotional duties. The boy, *Gnanasambandha* by the grace of Sundareswara and Minakshi gradually attained spiritual awakening to such a degree that he refused to go back to Villiputtur with his parents who had finished their pilgrimage.

Gnanasambandha lived alone at Madura continuing his worship at the shrine and leading the well regulated life of a devotee. One early morning when he went to the golden lotus tank for bathing, he discried a number of pious men wearing the sacred ash and the Rudraksha worshipping the idol of god placed in front of each of them, with devotional ecstacy. He longed to do

worship as did those devotees and prayed before Chokka-linga to vouchsafe to him also such a blessed privilege. that night god appeared in his dream and spoke, "Your wish shall be fulfilled. You will find in the north eastern corner of the tank an image of mine for your worship". Accordingly, Gnanasambandha during the early hours before dawn next day rushed eagerly to the spot, plunged into the water and lo! to his immense delight, brought out the sacred symbol of god. He then gave vent to his ecstacy in eleven stanzas the first of which opens with the world, *"charming to the eye"*. He prayed to God therein that it must be given to him to sing the praises of god, to worship god, to meditate upon god—and in short, to live in god perpetually.

God Chokkanatha in another dream directed Gnana-sambandha to approach *Gnanaprakasa of Kamalai* for being initiated in the processes of worship and in the spiritual progress. God also intimated in a dream to Kamalai Gnanaprakasa the arrival of a pupil by His direction.

Gnanasambandha next set out for Tiruvarur and reached the place on a Monday and found the god appointed guru sitting in contemplation Dakshinamurti image in the great temple of Thiyagaraja. Gnana-sambandha fell at the feet of Gnanaprakasa, and the guru gave him the Diksha of worship and *Gnana*. Gnanasambandha guru and Chokkanathavenba in praise of his favourite deity.

Gnanasambandha lived at Tiruvarur near his guru striving intently on the path of devotional and spiritual progress. One night Gnanaprakasa returned late from his meditation before the Dakshinamurti in the temple and the streets being dark and the usual lamp-bearer having gone to sleep, Gnanasambandha bore the lamp in his hand and led the guru to his a bode. On entering his residence the guru bid the sishya stay and went in. "The sishya obeyed the guru's word and stayed at the gate, lamp in hand, all the night, forgetting himself in the contemplation of Siva. It showered heavily that night, but for a few yards about him not a drop fell. When next morning the wife of Kamalai Gnanaprakasa opened the door she found Gnanasambandha standing there lamp in hand and undrenched by the night showers. With astonishment she went in and informed her husband of the miracles. Gnanaprakasa came out and saw and being convinced of his pupil having attained spiritual perfection gave him directions to take his abode at Dharmapuram not far off from Tiruvarur for spreading the great truths of the Saiva Siddhanta.

Gnanasambandha, though inconsolable at the separation still obeyed and settled at Dharmapuram and there wrote the *Sivabhoga Sara* and the *Tripadartha Rupadi Dasakarya Ahaval*.

During the hey day of Gnanasambandha's glory, there lived at Chidambaram *Marrai Gnana Pandaram*

"the blind folded" who was well versed in all the Agamas and the great Saiva works, but was lacking in God's grace. He postulated in his work called *Mukti Nilai,* "the nature of salvation" that *Ananda* was an inherent trait of the Atma, that *Mala* stood in the way of the delectation and that when the obstruction was removed *Atma* could taste the bliss,—on the basis that like Siva the Atma also was *Satchidanandarupi.* Hosts of men adhered to his teachings because of his deep learning and powerful exposition. But Gnanasambanda refuted the doctrine in his *Mukti nischaya,* consisting of twentytwo stanzas and established that Ananda is not inherent in Atma, that Atma is only *Satchitrupi* that when the *Mala* is brushed away God's grace Atman plunges into *Sivananda* and that merger is *Mukti* or salvation.

Guru Gnanasambanda thus served Siva and the cause of Dharma for several years and gathered round him pupils like Ananda Paravasa Satchidananda, Marudur Apaduddharana and others. Upon his choosing to enter perpetual *Samadhi* he appointed as his successor in the *Gnana Pitha, Ananda Paravasa.* But the latter being for advanced in spiritual evolution, stayed in perpetual *Samadhi* to the west of where his Guru stayed therefore the Sishya group with a view to giving to the world an unbroken line of the gurus, invoked Guru Gnanasambandha to nominate another success or. The nomitation then devolved upon Satchidananda and the guru

attained *Sivasamadhi* finally in *Vaikhasi Aparapaksha Saptami*.

An inscription of Krishna Maharaya Ayyan King of Tanjore and daughter's son of Krishnadeva Raya during the times of Sadasiva Maharaya appoints Tiruvarur Gnanaprakasa Pandaram as the Superintendent of the *Devadanas* of *Sikkil, Vadakudi, Odacheri* etc. and bears a date equal to 1561 A. D. A stanza in the *Mazhuvadi Purana* written by Kamalai Gnanaprakasa records the date of its composition as Salivahana Sakabda 1488 (equal to 1566 A.D.) These two authorities prove that Gurugnanasambandha lived about 385 years ago (in the second half of the sixteenth century).

In the unbroken line of the successors in the *Tirukkailaya Paramparai* the great guru unlike the others who remain at the places of their samadhi, has taken his abode in a shrine called the temple of *Gnanapuriswara* and endowed with all the paraphernalia and the appurtenances usual to such an installation. for being the guide to salvation for all who resort to him.



## குருஞானசம்பந்த சுவாமிகள் தோத்திரம்.

சீரணியு நுதலின் விழி மழுமான் நாகம்
திருந்தும்எரி பொருந்தும் விடம் தெரிந்திடாமல்

தாரணிஅன் பரையாள அவர்போல் வந்த
சைவசிகா மணிஎவர்க்கும் தலைவன் எங்கோன்

காரணியு நெடியபொழிற் கமலை வேந்தன்
கருணைமழை பொழியும்திரு கடைக்க ணாளன்

பார்புகழும் ஞானசம் பந்தன் எந்தை
பரமன்திரு சரணமலர் பரவி வாழ்வாம்.

**திருச்சிற்றம்பலம்.**

உ

திருச்சிற்றம்பலம்

# சற்குரு வணக்கம்

கிடந்தாலு ஞானப்பிர காசனென் பேன்கிடந் தெழுந்து
படர்ந்தாலு ஞானப்பிர காசனென் பேன்பசி யோடுபிணி
அடர்ந்தாலு ஞானப்பிர காசனென் பேன்அந்த அந்தகனார்
தொடர்ந்தாலு ஞானப்பிர காசனென் பேன்பினைச்
சொல்இல்லையே. 1

I call out Jnanaprakas when I lay me down;
I call out Jnanaprakas when I rise and move about;
I call out Jnanaprakas alike when I suffer from hunger and sickness;
So also will I call out Jnanaprakas when the pangs of death are on me;
Beyond that, there is no other word. 1

வான்பார் கமலைத் திருஞான சம்பந்த மன்னனெங்கோன்
ஊன்பார் உடற்பவ நீக்கிட வோமொழி யோர் வசனந்
தேன்பாகு கற்கண் டிளநீர் வளைமுறி சீனிகன்னல்
ஆன்பா லினுந்தித்தித் தூற்றாய்ப் பெருகல் அதிசயமே. 2

Thiru Jnanasambandha our King, who lived in Kamalai Famed for its glory as far high as Heaven!
Is it too much for you to free me from this wordly existence?
May a word from Thy holy lips flow like a spring in my heart,
With melody for sweeter than honey, jam or crystal sugar.

The water of the green cocoanut, the juice of the chalice
and the milk of the cow!
That shall indeed be a romance in my life,
A mystery not yet experienced. 2

அறியாமை நிற்கு மதித்தி லேசென் றறிவொடுநான்
அறியாமை தோன்றநின் றேனின் றளவில் அவிழ்ந்து நிற்க
அறியாமை யிற்பெறு பேறிழந் தேனினி யாகினு நான்
அறியாமை தீரஅருள்ஞான சம்பந்த ஆரமுதே. 3

Having attained the stage that transcends finite
Kowledge I stood lost in mystic thought displaying
My ignorance, when, Lo! loosened from its tie
It disappeared and true light shone in me.
O Teacher of wisdom pure! Give me the higher
Knowledge and this very instant cast away
The Sins that could me with ruin and despair. 3

கருணைக ரன்புக ழாகரன் எங்கள் கமலையில்வாழ்
திருஞான சம்பந்த தேசிகன் சொற்படி சென்றுநிற்க
ஒருநா ணிகழ்ந்தது சொல்லவற் றேனின் றுயிர்ப்பறவே
தருகாய மின்றியொர் ஆனந்தம் எங்குந் தலைப்பட்டதே. 4

My life was moulded on lines shown and taught by Him
Who is an ocean of Grace and Fame who lives in Kamalai
Crowned in Divine Glory whom all adore as Jnanasam-
[bandha.
Shall I speak out an incident that happened
But once in my life? My senses failed, my body was
Reduced to naught and breath departed therefrom;
And I found myself wrapped in raptures pure. 4



வன்மைபுரி காய மரப்பாவை தன்னை அரன்
கன்மமெனுஞ் சூத்திரத்தால் கட்டியே—நன்மைதின்மை
ஆட்டுவது நாடா தறிவிலார் தஞ்செயலாய்
நாட்டுதல் போல் உண்டோ நகை.



*தருமபுர ஆதீனம் 25-வது மகாசந்நிதானம்*

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

உ

குருபாதம்

# சிவபோக சாரம்

# SIVA - BHOGA - SARAM

## THE ESSENCE OF BLISSFUL EXPERIENCE

### *1. அடிகள் வணக்கம்*

*சித்தி தருநாதன் தென்கமலை வாழ்நாதன்*
*பத்தி தருநாதன் பரநாதன்—முத்திப்*
*பெருநாதன் ஞானப் பிரகாசன் உண்மை*
*தருநாதன் நம்குருநா தன்.* **1**

### 1. SALUTATION TO THE GURU.

The Lord that giveth attainment
The Lord that liveth in the south Kamalai
The Lord that inspireth love
The Lord that is supreme
The Great Lord of Freedom, Jnanaprakas.
The Lord that revealeth truth
He is our Master **1**

அருவும் உருவும் அருவுருவும் அல்லா
ஒருவ னுயிர்க்குயிரா யோங்கித்— திருவார்
கமலைவரு ஞானப்ர காசனென வந்தே
அமலபதந் தந்தெனையாண் டான். 2

The one that is neither the formless
Nor the form nor the formless form
Sprang as the life of all life and came
Hailing from holy Kamalai, Jnanaprakas,
He gave me His immaculate feet
And admitted me into His Grace. 2

ஆரறிவார் நீதிவழி யாரறிவார் சித்திமுத்தி
ஆரறிவார் நற்றவங்கள் அன்பனைத்தும்—பாரெவர்க்கும்
கத்தன் கமலையில்வாழ் ஞானப்ர காசனெனும்
அத்தனென்போல் வந்திலனா னால். 3

Who could know the path of justice
Who could know Siddhi and Mukthi
Who could know the good austerities
And fulness of love.
If the Lord of all men on Earth
The Father, Jnanaprakas of Kamalai
Had not come in a form like mine? 3

அரியயற்கு முன்னாள் அடிமுடியுங் காணாப்
பெரியவனே வந்து பிறந்து—துரியம்
பெருக்கின்றான் ஞானப் பிரகாச னாகி
இருக்கின்றா னாரூரில் இன்று. 4

The Great One Himself whose crown and feet
Could not be seen by Aja and Hari
Hath come, hath been born. He increaseth Turiya
The estate of man, the highest serenest calm.
In Arur He hath his abode this day
As Jnanaprakas. 4

கண்டேனிப் பாசங் கழிந்தேன் அமுதைமுகந்
துண்டேன் சுகானந்தத் துள்ளிருந்தேன்—வண்டிமிர்காத்
தேனைப் பொழிகமலைச் செங்கமலப் பொற்பாத
ஞானப்ர காசனையே நான். 5

I saw Him. My bonds slipped off.
Nectar I scooped and drank.
I was in blissful ecstasy
I saw Jnanaprakas, Him of Kamalai,
Whose gardens pour honey to the murmuring bees
Him with golden feet like lotus red. 5

உள்ளிருந்தே யென்று முணர்த்துகினும் கண்டிலரென்(று)
உள்ளும் புறம்புமா வோமென்று—மெள்ள
நரருருவாய் ஆரூரில் வந்தான் நமையாண்
டருள்புரிஞா னப்பிரகா சன். 6

We dwell within and ever prompt them
Still they have not found us out;
Now let us be within, without as well,
Thought Jnanaprakas,
And soft in human form He came
In Arur; into His Grace accepted us. 6

இருளுந்தய நீக்கும் இரவியைப்போல் என்னுள்
அருளுதய நன்ரு யருளி—மருளுதய
மாற்றியவன் ஆரூரன் மாமறையும் ஆகமமுஞ்
சாற்றியஞா னப்பிரகா சன். 7

Like the sun that driveth the enshrouding darkness
With the dawn of His Grace, well bestowed in me
The appearance of ignorance He drove
He of Arur, that uttered the Vedas
And Agamas great, Jnanaprakas. 7

ஒழியாத பேரின்பத் துள்ளாய் உலகில்
விழியா திருந்து விடவே—அழியாத
பூரணா செங்கமலப் பொற்பாதா தென்கமலை
ஆரணா நாயேற் கருள். 8

Merged in great unending joy
To remain unawakened to the world,
Thou Perfect One, Everlasting,
Thou with golden feet like lotus red,
Thou of Kamalai of the South
Lord of the Vedas, help Thou me,
Me as lowly as a dog. 8

தேடுந் திரவியமும் சிற்றறிவும் பற்றுதலும்
கூடும்பொய் என்றருளிற் கூட்டினுன்—நாடரிய
ஞானப்ர காசனுயர் நற்கமலை மாநகர்வாழ்
வானப் பிறையணிந்த மன். 9

The treasure that is sought,
The knowledge imperfect,
The desire that clingeth,
All these are lies, — In Grace
He made known to us, Jnanaprakas
That dwelleth in the great city,
Kamalai, noble and fair,
The king hard to approach,
Adorned with the crescent moon. 9

காண்பதும்பொய் கேட்பதும்பொய் காரியம்போ
[லேயிதமாய்ப்
பூண்பதும்பொய் எவ்விடத்தும் போகமும்பொய்
[—மாண்பாகத்
தோற்றியின்ப வெள்ளமாய்த் துன்னிஎன்னுட் சம்பந்தன்
வீற்றிருப்ப தொன்றுமே மெய். 10

Whatever be seen is lie, whatever be heard is lie,
Whatever be taken up as wholesome work is lie.
Whatever be enjoyed whithersoever is lie. But this,
That Sambandha cometh in sublimity,
Closeth as a flood of joy and hath His abode in me,
This alone is true. 10

## 2. பெறுதற் கருமை

ஒருமையுடன் ஈசனருள் ஓங்கிஎன்றுந் தூங்கல்
அருமை அருமை அருமை—பெருமை இடும்(பு)
ஆங்காரங் கோபம் அபிமானம் ஆசைவினை
நீங்காத போதுதா னே. 11

## 2. THINGS HARD OF ACHIEVEMENT.

Hard, hard, hard it is to be lapped
In single-minded communion with the growing grace
of God.
When conceit, cruelty, egotism, anger
Attachment and actions born of desire
When these are not eschewed. 11

தன்பெருமை யெண்ணுமை தற்போத மேயிறத்தல்
மின்பெருமை யாஞ்சகத்தை வேண்டாமை—தன்பால்
உடலைத் தினம்பழித்தல் ஓங்குசிவத் தொன்ருல்
நடலைப் பிறப்பொழியு நாள். 12

Thinking not of one's own glory, losing self-conceit,
Discarding the world whose glory is that of the lightning flash, so fleeting
Despising one's own body, day in, day out,
Holding holy communion with the exalted Lord—
The day when these do happen is the day
When painful birth doth cease. 12

உரையிறந்தால் உன்னும் உணர்விறந்தால் மாயைத்
திரையிறந்தால் காண்கின்ற தேவை—வரைபெருக
வாசிப் பதும்நாவால் வாழ்த்துவதும் நாடகமாய்ப்
பூசிப்ப தும்சுத்தப் பொய். 13

It is wholly wide of the mark, feigning and farcical,
To read the sacred lore in ever-extending bounds,
To praise with tongue and worship God,—
The God who is only seen
When word hath ceased, and thought hath died
And the screen of Maya hath been torn asunder. 13

பரம ரகசியத்தைப் பாழான வாயால்
இரவுபகல் எந்நேர மின்றிக் — குரல்நெரியக்
கூப்பிட்டுங் காணுமோ கோழைமட நெஞ்சேமால்
பூப்பிட்டுங் காணாப் பொருள். 14

Can it be found the Secret so supreme
Even though thou callest out, night and day,
Unceasingly, till thy voice cracketh hoarse—
O feeble foolish heart!—the Thing
That could not be found even though Vishnu did seek
Cleaving through the solid earth ? 14

ஒருகோடி ஆகமங்கள் எல்லாம் உணர்ந்தும்
பெருகுதவம் சித்தியெல்லாம் பெற்றும் — குருவருளால்
வைத்த படியிருக்க மாட்டாத மாந்தர்க்குச்
சித்தாசல னம்மாந் தினம். 15

Even though they master a million scriptures
Practise stern austerities and powers mysterious gain,
To the men that cannot be steadfast
Where the Guru's grace hath placed them
There will be mental perturbations
Ever and aye. 15

அன்புமிக உண்டாய் அதிலே விவேகமுண்டாய்த்
துன்ப வினையைத் துடைப்பதுண்டாய்—இன்பம்
தரும்பூ ரணத்துக்கே தாகமுண்டாய் ஓடி
வருங்கா ரணர்க்குண்மை வை. 16

Keep the truth apart for those
Whose love doth grow from more to more
Whose knowledge groweth from out that love
Who wipe out Karma, the cause of pain,
Who go running thirsting after
The Perfection that yieldeth Joy. 16

## 3. அறியும் பகுதி

உருவை அருவை ஒளியை வெளியை
இருளைச் சிவமென் றிராதே — மருளைப்
பிறிந்தறிவிற் கண்டதனைப் பின்னமற எங்குஞ்
செறிந்தபொருள் தானே சிவம். 17

## 3. THINGS TO BE KNOWN.

Mistake thou not as Sivam anything
That hath form or that is formless
Or light or space or darkness.
That thing is Sivam Which filleth
Indistinguishably, through and through,
That which hath been realised
In knowledge when purged of ignorance. 17

அகமாதி கண்ட அறிவாகி எங்குஞ்
சகமாகி இன்ப சுகமாய்ச் — சுகாதீதத்
தானந்த வெள்ள மதுவாய்ச் சுகத்தைஅகன்
முனந்தம் ஆதியிலா தான். 18

He who is the knowledge realised
Within, without
Who is all-pervading joy, delightful happiness
Who is the flood of ecstasy transcending joy,
Who is yet, apart from joy
He is the One
That neither end nor beginning hath. 18

இந்தனத்தில் அங்கி எரிஉறுநீர் தேனிரதங்
கந்தயலர்ப் போதுவான் காலொளிகண் —சந்ததமும்
அத்துவித மாவதுபோல் ஆன்மாவும் ஈசனுமாய்
முத்தியிலே நிற்கும் முறை. 19

Just as fire in wood, water in fire,
Taste in honey, fragrance in flower,
Ether in air and light in the eye
Are distinct and yet not two
Even so do the soul and the Lord
Stand related in libearation. 19

ஆறாறு தத்துவமும் ஆணவமும் நீங்கிஉயிர்
வேறாக நின்றஇடஞ் சொல்லின் —மாறா
இருளாய பாவனையற் றெங்குமாய் நின்ற
பொருளேகாண் நீயே புணர். 20

Wouldest thou know the place
Where the soul doth stand alone
With tatvas thirty six and Anava cast off,
Beyond the darkness of ceaseless thought ?
Behold the Thing that standeth everywhere :
Unite thyself with It. 20

நனவாதி அந்தத்தில் நாடுசுகந் தன்னைக்
கனவாதி அந்தத்தில் கண்டு—நனவாதி
தோற்றிடும்போ தந்தச் சுகரூபங் கண்டவர்கள்
மாற்றிடுவர் என்றும் மலம், 21

The joy they seek in wakeful states
They find in states of dream;
They see that form of joy again
When wakeful states come on ;
Verily, such as they
Shall smite impurity. 21

தத்துவங்கள் எண்ணித் தலையடித்துக் கொள்ளாதே
தத்துவங்கள் ஏதென்னின் சாற்றக்கேள்—மெத்துஞ்
சுகாரம்ப மாஞ்சிவத்தில் தோயாத மாயா
விகாரங்கள் தத்துவமா மே. 22

Why knock thy head in counting the tatvas ?
Harken what thy are,
They are but Maya's mutations
That cannot touch, in whatever way
Sivam, the source of joy. 22

ஆருறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்
நீருக முத்திநிலை நிற்போர்க்குப்—பேருகப்
பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியின் சித்தியிலே
ஓர்விருத்தப் பாதிபோ தும்.

As guide to those who stand for bliss
With tatvas six times six
Anava and actions hard
All to ashes turned,
If one doth search through all the books
That are spread on earth.
Just one half of a single verse
In Siddhiyar will do. 23

## 4. உபதேச விளக்கம்

பரவிமனம் போகாப் பரத்தடைய நாளும்
இரவுபகல் அற்ற இடத்தே—திரமாக
நில்லென்ருன் கண்டஎல்லாம் நேதிபண்ணி மும்மலமும்
கொல்லென்ருன் ஞான குரு. 24

## 4. THE LIGHT OF SPIRITUAL INSTRUCTION.

The Supreme that the mind cannot approach
If thou wouldest like to reach,
Stand firm always at the place
Wherein is neither night nor day ;
Know that whatever thou seest in not thou
Quell down the Malas Three—
The teacher of wisdom said. 24

காயம் கரணமுதல் நான்கிற்குங் காரணந்தான்
ஆயுஇருள் மாயை அதுஎன்றால்—தூயபொருட்
போதனே! செங்கமலப் பொற்பாத னே! எனைநீ
ஏதென்று சொல்லாய் இனி. 25

If dark Maya be the cause of the four,
Body, karana, world, enjoyment,
Thou that teachest the truth so pure,
Thou with golden feet like lotus red
Say, what am I ? 25

என்னை அறிவென்றான் என் அறிவில் ஆனந்தந்
தன்னைச் சிவமென்றான் சந்ததமும்—என்னை உன்னிப்
பாரா மறைத்ததுவே பாசமென்றான் இம்மூன்றும்
ஆராய்ந் தவர்முத்த ராம். 26

Intelligence, He called me
The joy within my intelligence, He called Sivam.
What constantly hid Thee from me, He called Pasam.
Whoever have understood these three
They are the liberated. 26

எங்கும் இருக்கும் அறிவுநீ ஏகமாய்
அங்கங் குணர்த்தும் அறிவுநாம்—பொங்கு
மலமறைத்தல் மாயை மயக்கல் விகாரப்
பலமனைத்தும் கன்மமலம் பார். 27

Thou art the intelligence that is everywhere
We are the One Intelligence instructing everywhere
Puffed-up mala hideth, Maya doth confound.
Lo ! it is karma that yieldeth all the diverse fruits. 27

